Registered No. M. 2330

"SIDDHANTHAM"
Vol. 35—No. 7



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 35 | சுபகிருது ஆடி 1962 ஜூலை | இதழ்

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர்: புலவர் - முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.

உதவிப் பத்திராசிரியர்: மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டு சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

# சைவப் பெரியார்களுக்குப் பாராட்டு விழா

சமாஜத்தோடு நீண்டகாலத் தொடர்புடையவர்களும், சைவசமயத்திற்குப் பெருந்தொண்டு புரிந்து வருபவர்களு மான உயர் சைவத் திருவாளர்கள் - ச. சச்சிதானந்தம் பிள்ளை B. A. L. T., A. சோமசுந்தரம் செட்டியார் M A., இவ்விருபெரி யார்களுக்கும் சிறந்த முறையில் பாராட்டு விழா நடத்த வேண்டு மென்றும், அதை யொட்டி மலர் ஒன்று வெளியிட வேண்டு மென்றும் 1—7—62-ல் கூடிய சமாஜச் செயற் குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப் பெற்றது. விழா கூடிய விரைவில் நடத்த வேண்டியிருக்கிற படியால் அன்பர்கள் தங்களுடைய நன்கொடைகளைக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பிவைக்கும் படி கேட்டுக் கொள்ளப் படுகின்றனர்.

G. கலியாணம் M. A.,
சைவ சித்தாந்த மகாசமாஜம்
12. கிழக்கு மாடவீதி
மயிலாப்பூர், சென்னை-4

## சமாஜத் தேர்வுகள்

சமாஜம் நடத்தும் சைவப்புலவர், இளஞ்சைவப்புலவர் தேர்வுகள் 1962 நவம்பர் 17, 18-ஆம் நாட்கள் (சனி, ஞாயிறு) சென்னை, கொழும்பு, யாழ்ப்பாணம், சிதம்பரம், மதுரை, நாகர்கோயில் முதலிய இடங்களில் நடைபெறும். 100-க்கு 60-க்குமேல் மார்க்குகள் பெறுபவர்களுக்குப் பரிசு வழங்கப்படும். தேர்வு எழுத விரும்புவோர் சமாஜச் செய லாளருக்கு 25—10—62க்குள் விண்ணப்பங்களை அனுப்ப வேண்டும். தேர்வு முடிவுகள் 1962 டிசம்பர் சித்தாந்த இதழில் வெளியிடப்பெறும். தேர்வில் வெற்றி பெற்றவர் களுக்குச் சமாஜ ஆண்டு விழாவில் பட்டங்கள் வழங்கப் பெறும்.

Reg. M. 2330 உ.

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

மலர் 35 | சுபகிருது ஆடி 1962 ஜூலை | இதழ் 7

## "இத்தை விளைத்தல் மலம்"

—: ந. ரா. முருகவேள் :—

'உண்மை விளக்கம்' என்னும் சைவ சித்தாந்த சாத்திர நூலில், மிகவும் சிறந்த முதன்மையான செய்யுட்களுள் ஒன்றாகத் திகழ்வது, முத்தி நிலையைப் பற்றிக் கூறும் பின்வரும் செய்யுள் ஆகும்:

" முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்த அனு போகத்தைத் துய்த்தல் அணு ;—மெத்தவே
இன்பங் கொடுத்தல் இறை ; இத்தை விளைத்தல்மலம் ;
அன்புடனே கண்டு கொள் ! அப் பா "

இச் செய்யுளில் அறிஞர்களிடையே பெரிதும் மலைவினையுண்டாக்கும் பகுதியாக விளங்குவது, 'இத்தை விளைத்தல் மலம்' என்னும் பகுதியாகும். அதுபற்றி ஈண்டுச் சிறிது காண்போம்.

சைவசித்தாந்தம் சற்காரியவாதத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதனை முன்னரே கண்டோம். இதனைச் சிவப்பிரகாசத்தில் " தாவில் சற்காரியத்தாய் மலைவறும் உணர்வு " என்று உமாபதி சிவமும் குறிப்பிட்டருளியுள்ளார்.

---

'சைவ சித்தாந்த சாத்திர வகுப்புக் குழு' வின் சார்பில், மே மாதம் 18—19—20 தேதிகளில் திரு. வி. க. மணி மண்டபத்தில். உண்மை விளக்கம் பற்றி நிகழ்த்திய சொற்பொழிவுகளின் ஒருபகுதி.

சற்காரிய வாதமாவது "உள்ளது போகாது இல்லது வாராது உள்ளதே உள்ளது" என்னும் கொள்கையாகும். இதன்படி இருக்கின்ற பொருள்கள் எதுவும் அழிய மாட்டா (Indestructibility of matter) என்பது தெளிவு. அதுபற்றி முத்திநிலையினும் முப்பொருள்களும் உண்டு என்பது தேற்றம்.

"கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியை ஒத் திருப்பன் அந்த முத்தியினிற் கலந்தே"

என்றாற் போல, முத்திநிலையில் ஆன்மாவுக்கு இன்பம் தரும் பதி ஆகிய இறைவன் உளன்.

"உம்பர்பிரான் உற்பத்தி யாதிகளுக் குரியன்
உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே"

என்றபடி, சிவானுபவ நுகர்ச்சிக்கு உரிமையுடையதாகிய பசு என்னும் உயிரும் முத்தி நிலையில் உள்ளது. முத்தி நிலையில் 'உயிர் தன்னியல்பு கெட்டழிந்து சிவத்தை அணைந்து நிற்கும்' எனச் சிவசங்கிராந்த வாதி முதலிய சமயவாதிகள் கூறுவர். 'கெட்டு அணையும்' என்னும் அவர்தம் கூற்றை நான்கு வகையாகப் பாகுபாடு செய்து கொண்டு,

"... சிவத்தை அணைந் தொன்றாய்
நின்றதுயிர் கெட்டதென்னில், கெட்டதணை வின்றாம்;
நின்றதேல், கேடில்லை; அணைந்து கெட்ட தென்னில்,
பொன்றினதேன்? முத்தியினைப் பெற்றவரார்? புகல் நீ.
பொன்றுகையே முத்தி எனில், புருடன் நித்தன்
அன்றாம்"

என அவர்தம் கூற்றை மறுத்துரைத்து, முத்திநிலையிலும் உயிர் அழியாது உள்ளமையினைச் சிவஞான சித்தியார் தெளிவித் திருத்தல் காணலாம். இனி மூன்றாவதாகிய பாசத்துள், மாயை கன்மங்கள் இடையே வந்தவை (ஆகந்துகம்) ஆதலின், தனுகரணாதிகள் நீங்கிய அளவில் மாயை கன்மங்கள் நீங்கியொழிகின்றன. எஞ்சிநிற்கும் ஆணவமலம் பற்றியே நாம் ஈண்டு ஆராய்தல் வேண்டும்.

பேதவாதிகள் மாயை கன்மங்களைப் போல ஆணவ மலமும் அழிந்து விடும்; அழியாக்கால் ஆன்மாவுக்கு ஞானமும் அதன் பயனாகிய முத்தியும் நிகழமாட்டா என்று கூறுவர். பாடாணவாதிகள் குணம் அழியிற் குணியும் அழியுமாதலின், உயிர்த் தன்மையாய் அனாதியே உடன் நிற்பதாகிய ஆணவமலம் ஒருபோதும் அழிவதில்லை; அழிந்தால் ஆன்மாவும் அழிந்து விடும் தன்மையதாய் முடியும் என மொழிவர்.

ஆணவம் அழியும் என்றால், 'உள்ள பொருள் அழியாது' என்னும் சற்காரியவாதக் கொள்கைக்கு முரண்படும். அழியாது என்றால், ஆன்மா ஞானமும் அதன் பயனாகிய முத்தியும் எய்தாதென முடியும்.

"அழிந்திடும் பாசம் என்னில் நித்தம் என் றறைதல்
வேண்டா
அழிந்திடா தென்னின் ஞானம் அடைவது கருத
வேண்டா"

என்பது சிவப்பிரகாசம் எனவே மருந்தினால் தடுப்புண்ட விடமும், ஒளியின் முன்னர் இருளும், தேற்றாங் கொட்டையிடப் பெற்ற கலங்கல் நீரும் போல ஆணவ மலமானது தான் மாயாமல், தன் ஆற்றல் மட்டும் மாய்ந்து முத்தி நிலையில் நிற்கும். இவ்வுண்மையினை,

"உரிய மலம் அவுடதத்தால் தடுப்புண்ட விடமும்,
ஒள்ளெரியின் ஒளிமுன்னர் இருளும், தேற்றின்
வருபரல் சேர் நீர்மருவு கலங்கலும் போல் ஆகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து... தேயும்"

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுள் கொண்டுணரலாம். ஆணவமலம் அழியாமையால் அது நித்தம் என்று கூறும் சற்காரிய வாதத்திற்கும், அதன் சத்தி அழிதலால் ஆன்மா ஞானமும் முத்தியும் அடைதற்கும் நேரும் தடையொன்றுமில்லை.

"அழிந்திடும் சத்தி நித்தம் அழிந்திடா, ஒளியின் முன்னர்
அழிந்திடும் இருளும் நாசம் அடைந்திடா, மிடைந்தி
டாவே",

எனவரும் சிவப்பிரகாசச் செய்யுளும் இக்கருத்தை வழி மொழிந்து வலியுறுத்துதல் காணலாம். இவ்வாற்றால் முத்திநிலையில் ஆணவமலம் உண்டென்பது இனிது பெறப் படும்.

இனி, முத்திநிலையிலும் ஆணவமலம் உண்டு என ஓராற்றான் உடன்படினும், தீங்கையே பயக்கும் இயல் பிற்றாய் எல்லாக் கேடுகட்கும் காரணமாகும் ஆணவ மலம், பேரின்பத்தை விளைவிப்பதாக முத்திநிலையில் மாறு வது எங்ஙனம்? பொருளியல்பு அழிந்தாற் பொருளும் அழியும் அன்றோ? என நம்மனோர்க்கு ஐயம் நிகழ்தல் இயல்பு. அது குறித்துப் பலவகையில் அமைவுரைகள் கூறலாம். ஒரு சில வருமாறு :

1. "நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்" என்றாற் போல, ஆணவமலத்தால் அடைந்த அளப்பருந் துன்பங் களால் முத்தி நிலையில் ஆன்மாவுக்குச் சிவானுபவ நுகர்ச்சி யின் சிறப்பு மேம்பட்டுத் தோன்றும். "துன்புளது எனின் அன்றோ சுகம் உளது ?" (கம்பர்) "துன்பம் உற்றவர்க்கு அலால் இன்பம் இல்லை" (சிந்) என்பனவும் ஈண்டு ணரற்பாலன. திருநாவுக்கரசர் சமண சமயத்தினின்று தாம் மீண்டும் சிவநெறி திரும்புதற்குக் காரணமாய் இருந் தமை பற்றித் தமக்கு ஆற்றொணாத் துன்பம் விளைத்த கொடிய சூலைநோயையும் 'யான் இதற்கு என்ன கைம் மாறு செய்ய வல்லேன்' என நன்றி பாராட்டி மகிழ்ந்து தொழுதனர்.

"பொய்வாய்மை பெருக்கிய புன் சமயப் பொறியில்
சமண் நீசர் புறத்துறையாம்
அவ்வாழ்குழி யின்கண் விழுந் தெழுமாறு அறியாது
மயங்கி அவம்புரிவேன்
மைவாச நறுங்குழல் மாமலையாள்
மணவாளன் மலர்க்கழல் வந்தடையும்
இவ்வாழ்வு பெறத் தரு சூலையினுக்கு
எதிர் செய்குறை என்கொல் ? எனத் தொழுவார்"

என இதனைச் சேக்கிழார் பெருமான் திருவாய் மலர்ந் தருளியுள்ளமையும் ஈண்டுச் சிந்திக்கத் தகும். மேலும்,

" ஊர்ந்து வரும் இள ஏறுடை யான்றன் உளத்தருளால்
சார்ந்து சமண் விட்டுறும் உனக் கேவரும் சைவநலம்!
கூர்ந்து மிளிர்தரும் நாவர சே, நல் குரவு முனம்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறும் செல்வமுமே"

எனப் போதரும் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடலும் இவ்வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும்.

2 நாம் பிறர்க்கு ஒல்லும் வகையா னெல்லாம் உதவி செய்தல் வேண்டும். உதவி செய்தல் இயலாதொழியின், தீமைசெய்யாமலாவது இருத்தல் வேண்டும். நன்மை செய்யாவிட்டாலும், தீமை செய்யாமலாவது இருப்பது ஒருவகையிற் பேருதவியாகக் கொள்ளத் தகும் எனலாம்.

" நல்லது செய்தல் ஆற்றி ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்! அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்,
நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே"

எனப் புறநானூற்றுப் புலவர் ஒருவர் பாடியது போல, இதுகாறும் சிவஞான விளைவுக்குத் தடையாய்த் தீங்கே பயந்து போந்த கொடிய ஆணவமலம், தன் ஆற்றல் அழிந்து யாதொரு கேடும் சூழ்தலின்றிச் செயலற்றிருப்பது தானே, முத்தி நிலையிற் 'காழில் கனி, போலும் சிவானுபவம் நுகர ஆன்மாவிற்கு ஒருவகையில் உதவியாகும். இதனை "எதிர்மறை யுதவி" (Negative help) எனக் கூறலாம்.

"அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்
இரக்கம் இன்மை யன்றோ இன்றிவ்வுலகங்கள் இராமன்
பரக்கும் தெல்புகழ் அமுதினைப் பருகுகின் றதுவே"

எனக் கைகேயியின் இரக்கம் இன்மையையும், கம்பர் ஓராற்றால் உலகுக்குப் பேருதவி புரிந்தது போலப் புகழ்ந்து பாடியிருத்தல், எதிர்மறை யுதவிக்கு ஒருவகையில் இனிய எடுத்துக்காட்டு எனலாம்,

3. ஒரு பொருளுக்கு அதன் இயற்கைப் பண்பு என்றுமே மாறாது என்பது சற்காரியவாதம். அதன் படி ஆணவமலத்தின் இயற்கைப் பண்பும் என்றும் மாறுபடாது என்பது தெளிவு. அறியாமை விளைவித்தல் ஆணவ மலத்தின் இயல்பு. பெத்த நிலையில் ஆணவமலம் ஆன்மா சிவத்தை அறியாமற் செய்யும், முத்தி நிலையில் அஃது ஆன்மா உலகத்தை அறியாமல் மறைக்கும். சார்ந்த தன் வண்ணமாந் தன்மையாற் பொருள்களை அதுவது வாய் நின்று அநுபவிக்கும் இயல் பிற்றாகிய ஆன்மா, சிவத்தை யன்றி ஏனையவற்றையும் அறியத் தலைப் பட்டுழிச் சிவானுபவ விளைவிற்கு இடையூறாய்க் குறைவு படும். எனவே ஆணவமலம் முத்தி நிலையில் உலகத்தை அறியாமற் செய்வது, ஆன்மா சிவத்தை முழுதாக நன்கினிது அநுபவித்தற்குத் துணைபுரிவதாகின்றது. அது பற்றியே 'இத்தை விளைத்தல் மலம்' எனக் கூறப் பட்டது.

4. இன்ப நுகர்ச்சிக்கு நுகர்வதும் நுகரப்படுவதும் ஆகிய இரு பொருள்கள் இருத்தல் வேண்டும். அவ்விரு பொருள்கள் தனித்தனியே பிரிந்து நிற்பின் இன்பம் நிகழாதாகலின், அவை இரண்டறப் பிரிப்பின்றி இயைதலும் வேண்டும். இங்ஙனம் பொருள்கள் ஒருவகையில் இரண்டாயும், பிறிதொருவகையில் ஒன்றாயும் இயைந்து நின்ற வழியே இன்ப நுகர்ச்சி யுண்டாம். அதுபோது 'யான் இதனை நுகர்கின்றேன்' என்னும் தன்னுணர்வு (Self-consciousness, not Egotism) நிகழப் பெற்றால் தான், இன்ப நுகர்ச்சி மேலும் மிகுதிப் பட்டுச் சிறந்தோங்கும்.

"ஆனந்த வெள்ளத் தழுந்தும் ஓர் ஆருயிர் ஈருருக்கொண்டு
ஆனந்த வெள்ளத் திடைத்திளைத் தால்ஒக்கும்; ஐய! மெய்யே
ஆனந்த வெள்ளத் தறைகழ லோன் அருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம்வற் றாதுமுற் றாதிவ் அணிநலமே"

எனவரும் மாணிக்கவாசகரின் திருச்சிற்றம் பலக் கோவையார் செய்யுளால், இன்ப நுகர்ச்சிக்கு இருபொருள்கள் இன்றி

யமையாமையினை இனிது உணரலாம். அம் மணிவாசகர் தாமே பிறிதோர் இடத்தில்,

"சொற்பால் அமுதிவள் யான்சுவை என்னத் துணிந் திங்ஙனே
நற்பால் வினைத் தெய்வம் தந்தின்று, நான் இவள் ஆம் பகுதிப்
பொற்பு ஆர் அறிவார்? புலியூர்ப் புனிதன் பொதியில் வெற்பிற்
கற்பாவிய வரைவாய்க் கடிதோட்ட களவகத்தே"

என அருளிச் செய்திருத்தல் கொண்டு, இன்ப நுகர்ச்சியைத் தலைப்படுதற்கு இருபொருள்கள் தம்முள் ஒன்றி இயைதல் வேண்டும் என்பது தெளியப்படும்.

"செழுநீர் மதிக்கண்ணிச் சிற்றம் பலவன் திருக்கழலே
கெழுநீர் மையிற் சென்று கிண்கிணி வாய்க்கொள்ளும் கள்ளகத்த
கழுநீர் மலர் இவள்; யான் அதன் கண்மரு விப்பிரியாக்
கொழுநீர் நறப்பரு கும்பெரு நீர்மை அளிகுலமே"

எனவரும் 'திருச்சிற்றம்பலக் கோவையார்' செய்யுளால், 'யான் இதனை நுகரப் பெறுகின்றேன்' என்னும் தன்னுணர்வு நிகழப் பெறுதலே, இன்ப நுகர்ச்சியானது மிக்குப் பெருகிச் சிறந்து நிகழ்தற்கு ஏற்றவாயிலாகும் என்பது தெளிவாம். 'யான் இதனை நுகரப் பெறுகின்றேன்' என்னும் உணர்வை நிகழச் செய்யும் ஆணவ மலத்தின் ஆற்றல் அதோ நியாமிகாசத்தி எனப்படும். சகல நிலையிற் போல முத்திநிலையிலும் அச் சத்தி ஓராற்றால் தொழிற்படுகின்றது. ஆன்மாக்களுக்குப் போக நுகர்ச்சியை இவ்வாறு விளைவிக்கும் 'அதோ நியாமிகா சத்தி' யுடைமை பற்றியே 'போத்திருத்துவத்தை நிகழ்த்தும் ஆணவம் இயைந்து நின்றே" எனச் சிவஞான சித்தியார் (170) கூறுவதாயிற்று. 'போத்திருத்துவம்' என்பது போக நுகர்ச்சிக்கு வினைமுதல் ஆகும் தன்மை. இங்ஙனம் முனைப்பை விளைவிக்கும் இயல்புடைய ஆணவமலம் தன் ஆற்றல் அழிந்து, முத்திநிலையிற்

சிவத்தை அநுபவிக்கும் ஆன்மாவிற்கு 'நான் அனுபவிக் கின்றேன்' என்னும் தன்னுணர்வை மட்டும் விளைவித்துச் சிவானுபவ நுகர்ச்சி மேலோங்கிச் சிறத்தற்குத் துணை நிற்றலின், "இத்தை விளைத்தல் மலம்" என ஆசிரியர் குறிப்பிட்டார்.

"கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம் மன்னும்
ஒல்லை விடையா னைப் பாடுதுங்காண் அம்மானாய்"

"கல்லை மென்கனி ஆக்கும் விச்சை கொண்டு
என்னை நின்கழற்கு அன்பன் ஆக்கினாய்"

எனவரும் திருவாசகத் திருப்பாடல்கள், முனைப்பை விளை விக்கும் ஆணவமலம், முத்திநிலையில் ஆன்மாவுக்குத் தன் னுணர்வை மட்டுமே நிகழ்த்தி யமையும் வகையில், அதன் ஆற்றலைத் தேய்ந்தழியச் செய்தருளும் சிவபிரானின் பெருங் கருணைத் திறத்தினை வியந்து புகழ்ந்ததாகவும் கொள்ளலாம்.

oooooo

## மகிழ்ச்சிச் செய்தி

நமது சமாஜப் பேரன்பரும், செந்தமிழ்ச் சைவ நலங் களில் தலைசிறந்து திகழ்பவரும், விருதுநகரில் நடைபெற்ற நமது சமாஜ ஆண்டு விழாவில் திரு. சர். கந்தையா அவர் களுடன் தாமும் இலங்கையினின்று போந்து கலந்து கொண்டு சிறப்பித்த பெருந்தகையாரும், வேறு பல மாட் சிமைகள் மிக்கவரும் ஆகிய உயர்பெருந்திரு. பொ. ஸ்ரீஸ்கந் தராஜா அவர்கள் இலங்கையரசின் சுப்ரீம் கோர்ட் நீதிபதி களுள் ஒருவராக அண்மையில் நியமனம் பெற்றிருப்பது அறிந்து சமாஜம் பெரிதும் மகிழ்ந்து பெருமிதம் கொள்ளு கின்றது. அவர்கள் நீடினிது வாழ்ந்து, தமிழும் சைவமும் தழைத்தினிதோங்கத் தொண்டுகள் பலவும் ஆற்றுதல் வேண்டும் எனச் சிவபிரான் திருவருளைச் சமாஜம் சிந்தித்து வந்திக்கின்றது.

# "வீர சைவம்"

—— x ——

**தவத்திரு. இராமசாமி அடிகள், பேரூர்,**

*பழநியிற் சமாஜ விழாவில் ஆற்றிய சொற்பொழிவு.*

அன்புப் பெருமக்களே! தாய்மார்களே! வணக்கம். சிவ நெறியினைப் பல்லாண்டுகளாக வளர்த்து வரும். சமாச ஆண்டு விழாவில் பங்கு கொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. இவ்விழாவில் 'வீர சைவம்' என்ற தலைப்பில் பேசுமாறு என்னைக் கேட்டுக் கொண்டனர். வீர சைவ நெறியினைப் பற்றி எத்தனையோ பெருமக்கள் பேசியுள்ளனர். நூல் வடிவாக எழுதியுள்ளனர். அவற்றின் நுண்பொருள்களெல்லாம் நன்குணர்ந்த பெருமக்கள் பலர் இருக்கின்றனர். இருப்பினும், என்னை இத் தலைப்பில் பேசுமாறு கேட்டுக் கொண்டது, வீரசைவப் பெருநெறியில் வாழ்ந்து செந்தமிழ்ச் சிவ நெறியை உலகுக் கருளிய அருண்மிகு சாந்தலிங்கப் பெருமான் திருவருளைக் குறிக்கொண்டுதான் என்று நம்புகின்றேன்.

வீரசைவம், சைவம் என்ற இன்றைய கொள்கை களின் முடிவில்வேறுபாடு இருப்பதாக எனக்குத் தோன்ற வில்லை. சைவ சித்தாந்தக் கொள்கையையே வீர சைவம் என்ற பெயராலும் குறிப்பிடுகிறோம். முடிவில் சிறு வேறு பாடு உண்டெனச் சிலர் கூறுவர். ஆனால் நன்கு ஆராய்ந்து உணர்பவர்க்கு அது வேறுபாடாகத் தோன்றாது. சைவம் என்ற பெயர் இருக்க "வீர சைவம்" எனப் பெயர் வரு வானேன்? என ஆராயாமல் இருக்க முடியாது.

இப்பெயர் அக்கொள்கை யுடையவர்களால் வைத்துக் கொள்ளப் பட்டதா? மற்றோரால் இடப்பட்டதா? என்ப தையும் உணர வேண்டும் வலிமையுடைய கொள்கையின் காரணமாக இப்பெயர் கொள்ளப் பட்டிருக்கிறது. வழி பாடு முதலில் அகத்தில் மலர்ந்து புறத்தேயும் கொள்ளப்

பட்டது எனலாம். விரும்பிய இறை வடிவை எண்ணிய பெரியோர்கள், அவ்வடிவினை வழிபடுவதற்கான புறத் தொண்டுகளையும் மேற்கொண்டனர் மனத் தகத்தானாகிய இறைவனைப் பொருள் சேர் புகழ்ச் சொற்களாலே போற் றினர்.

அவ்வடிவினையே புறத்துக் கொண்டும் வழி பட்டனர் என்று கொள்ளலாம். அவ்வாறு அகவழிபாட்டில் முதிர்ந்த காட்சியையே புறத்தும் கொண்டு வழி படுவதற்காக அமைந்த வடிவங்கள் பல. அம்முறையில் நாம், நமது, சிவ வழி பாட்டை இலிங்க உருவமாக வைத்துப் போற்று கிறோம். இதன் கோட்பாட்டை நீங்கள் அறிவீர்கள். அரு வுருவத் திருமேனியாகக் கருதும் இலிங்கவழிபாடு பண்டை யது என்பதற்குரிய சான்றுகள் பல. உலக நாடுகளில் பல பகுதிகளிலும் சிவலிங்கங்கள் உள்ளன என்பதை வர லாறு கூறுகின்றது. புதையுண்ட பண்டையபகுதிகளிலும் இவ்வழி பாட்டுண்மை வெளிப் படுவதை அறிகிறோம்.

இவ்வாறு எல்லோரும் வழிபட அமைத்துக் கொண்ட இடங்களே திருக் கோயில்கள். அன்றியும் சிறப்பாகத் தமது உயிர்ப்பாக, உள்ளும், புறம்பும் வழிபடு முறையில் சிவ பூசைகளைத் தனித்தனி மேற் கொண்ட முறைமையும் காண்கிறோம். இதனை ஆன் மார்த்தம் அல்லது உயிர்க் குறுதி எனக் கொள்ளுகிறோம். இவ்வழிபாட்டில் தான் வீரசைவம், சைவம் என்ற இரு பாகுபாடுகள் தோன்று கின்றன. தத்தம் முறைக்கேற்ப ஒவ்வொன்றும் சிறந்தது எனக் கொள்ளுகின்றனர் அன்பர்கள். உயிர்க் குறுதியா கக் கொள்ளப் படும் இவ்வழி பாட்டில் வீர சைவ நெறி உறுதியானது.

வீரசைவ நெறி, காயமே கோயிலாக இறைவனை ஏற் றுக் கொள்ளுகிறது, இறைவன் நம் வழிபாட்டை ஏற்று அருள் புரிய நுண் வடிவில் மனத் தகத்தானாக இருக்கிறான். பருஅங்கத்தில் தங்குபவனாகவும் இருக்கின்றான் என்பதை வலியுறுத்துகிறது இந்நெறி இத்தகைய வீரசைவ நெறி இமய முதல், ஈழம் வரை பரவியிருக்கிறது. வட நாட்டில் உள்ள இமயத்தில் சிறந்தவழிபாட்டுத் தலமாக விளங்கும்

கேதாரம் வீரசைவப் பீடத்தில் ஒன்றுய்ப் பேசப்படு கிறது. இன்றும் அக்கோயில் ஆட்சிப் பொறுப்புஅப்பீடத் திற்கே உரியது எனக் கூறுகின்றனர். மற்றும் காசியில் ஒரு பீடமும், அதன் கிளையாக நேபாளப் பீடமும் அமைந் துள்ளன. அதுவன்றி உச்சயினி, சீசைலம், அரம்பாபுரி ஆகிய இடங்களிலும் வீரசைவப் பீடங்கள் உள்ளன. ஈழத்தில் சிலர் வழிபாடு ஆற்றும்தொண்டில் ஈடுபட்டிருப் பதையும் அறிந்தேன்.

வீரசைவ நூல்களில், இந்நெறி வேதகாலத்திற்கு முற்பட்டதாகக் கூறப் படுகிறது எனவும், இறைவனால் அருளிய ஆகமங்களில் முதலாகவிளங்கும் காமிகாகமத்தில் இந்நெறி உயர்ந்த தாகக் கூறப்படுகிறது எனவும் கூறி யுள்ளனர். மேலும், வடநாட்டுப் பீடங்கள் போலத் தமிழ்நாட்டுத்திருமடங்களும் பழமையான தாக விளங்கு கின்றன. வழிபாட்டு நெறியிலும், நூல்களின் குறிப்பு களிலும், இது பழமையானது எனக் கொள்ளப் படு கின்றது. அன்றியும் பழமையான பல திருவுருவங்களில் சிவலிங்கம் முடியிலுள்ளதாக அமைத்திருப்பதும், இது பழமையான வலிவுடைய, கொள்கை யென்பதை விளக் குகிறது.

வடமொழி நூல்களில் காமிகாகமம், வாதுளாகமம், வீராகமம் முதலான நூல்களில் இதன் பெருமை பேசப் படுகிறது என்பதையும்; நீலகண்ட சிவாச்சாரியார், பதி பண்டிதர்—ஆகியோர் இயற்றிய பேருரைகளும் (பாடியங் களும்) இதனைச் சிறப்பித்து உறுதிப் படுத்தியுள்ளன என்பதையும் அறிகின்றோம். இதனை நமது கற்பனைக் களஞ்சியம் ஆகிய சிவப்பிரகாச அடிகளார் தாம்இயற்றிய சித்தாந்த சிகாமணியில்,

'ஏக,,னுற்றருள் காமிக மேமுதல்
ஆக மத்திலறைந்திடு முத்தர
பாக முற்றும் பகர்வீர சைவமாம்
சோக மற்றுயர் தொன்மதந் தோன்றுமால்''

எனக் கூறுகின்றார்.

வீர சிங்காதன புராணத்தில்,

"வாதுளா கமத்தின் உத்தரத்துறு தந்திரோக்த வண்-
பிரதிட்டை மருவும்
ஆதியாஞ் சிவசித்தாந்த தந்திரத்தும் அதர்வண வேத
மத்தியினும்
நீதியாம் அநாதிவீர சைவத்தின் நிலையினைத் தொகுத்
தான் நிகரின்றி
ஓதிடும் பரம ரகசியமாக உரைத்தனன் உமையவள்
தனக்கே',

என்பதனுலும் அவ்வுண்மைகளை உணருகின்ருேம்.

மேலும் பண்டைய திருவுருவங்களின்முடியில் சிவலிங்கம் அமைத்திருப்பதும் வீரசைவத்தின் பழமைக்குச் சான்ருக உள்ளது. பண்டரி நாதராகிய 'விடோபாவின்' முடியில் சிவலிங்கம் இருக்கிறது. இதனைத் துக்காராம் தமது பாடலில் தெரிவித்துள்ளார். பர்சி பட்டினத்திலுள்ள 'பகவந்தன்' என்னும் திருமால் முடியிலும், சொண்டூர் 'குமாரசாமி' குட்டாபுரம் 'தானம்மை' யாதிய திருவுருவங்களின் முடியிலும். நமது தமிழகத்தில் மயிலாப்பூரிலுள்ள 'திருவள்ளுவர்' திருமுடியிலும் இன்னும் பல உருவங்களின் முடியிலும், சிவலிங்கம் இருப்பதை அறிகின்ருேம். இவற்ருல் இதன் பழமை நமக்குப் புலனுகிறது.

நமது தமிழகத்தின் திருமடங்களில் மிகச் சிறந்த அருளாளர்கள் இந்த நெறியை மேற் கொண்டு வாழ்ந்தார்கள், வாழ்ந்து வருகின்ருர்கள். மயிலம் பொம்மபுர ஆதீனம் காலத்தால் மூத்ததாகச் சிறந்து விளங்குவதும், பழைய தாகிய சாரங்க தேவர் மடம் குடந்தையில் இருப்பதும் தமிழகத்தின் வீரசைவ சமய வளர்ச்சிக்குச் சான்ருக விளங்குகின்றன.

மயிலம் திருமடத்தின் பழமையையும், அதின் சீடர்களாக வாழ்ந்த அருந்தவர்களின் நிலைமையையும் நாம் அறியும் போது, சித்தாந்த சிவநெறியே வீரசைவ நெறி எனத் திகழ்கின்றதென்பது புலனுகும். மயிலம் பொம்மபுர ஆதீனத்தின் மாணவர் ஆக விளங்கியவர் நமதுசெந்தமிழ்ச்

சிவப் பிரகாச அடிகளார். அவர் சைவ சித்தாந்தச் செந் நெறியையும், திருமுறை நெறியையும் எவ்வாறு மேற் கொண்டு இருந்தார்கள் என்பதை 'நால்வர் நான்மணி மாலையும், பிற பாக்களும் அறிவிக்கின்றன. அதேபோல் தமிழ் மொழியில் அவருக்கு இருந்த ஆர்வத்தையும், அப் பாடல்கள் நமக்கு அறிவிக்கின்றன.

வீரசைவ நெறி பண்டைய தமிழ்ப் பண்புகளுடன் விளங்குகிறது என்பதை அறிவதற்கு முன், இடைக் காலத் தின் நிலையையும் எண்ணிப் பார்க்க வேண்டியவர்களாக இருக்கிறோம். திருவாவடு துறையாதீனத்தின் சிறந்த அரு ளாளர் ஆகிய துறையூர்ச் சிவப்பிரகாச அடிகளார் தில் லைக் கூத்தன் வழிபாடு முட்டின்றி நடைபெற வேண்டி வீரசைவக் கொள்கையை மேற்கொண்டார் என்ற வர லாறு, உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அவரது மாண வராக அருண் மிகு சாந்தலிங்க அடிகளார் அவர்களும், அவர்களது மாணவராகக் கன்னட நாட்டு வேந்தராக விளங்கிய குமார தேவரும், அவரது மாணவராக முருகன் திருவாசகம் என்று சொல்லும் திருப்போரூர்ச் சந்நிதி முறையை அருளிய சிதம்பர சுவாமிகளும் விளங்கி, வீர சைவ நெறியைமுப்பொருள் உண்மைநெறியாம் சித்தாந்த நெறியாக வளர்த்துள்ளனர் என்பதை அறிகிறோம். அவர் கள் வாழ்ந்து வழிகாட்டிய நிலையங்களாகப் பேரூர் திரு முதுகுன்றம் திருப்போரூர் திருமடங்கள் விளங்குகின்றன. இன்றும் தில்லையில் மௌன சுவாமிகள் மடம், அம்பலத் தாடி மடம்போன்ற திருமடங்களும் அங்கங்கே வீரசைவச் செந்நெறி வளர்ச்சிக்குத் துணைபுரிவதாக இருந்து வருகின் றன.

வீரசைவ நெறி, குரு இலிங்கம் சங்கமம் ஆகிய மூன் றினையும் பேணுதலாகிய கொள்கையினை மிகச்சிறந்த தெனக் கொள்ளுகிறது. கொலை வேள்வியை வெறுக்கிறது. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்னும் உயரிய கொள் கையினைக் கடைப் பிடிப்பதே சிவநெறி. பண்டைய வழி பாடுகள் இவ்வுண்மையை வலியுறுத்தி அன்பும், அருளும் பூண்டகொள்கையையேசமயக்கொள்கையாகக் கொண்டு விளங்கின,

இறைவன் "புல்லிலை எருக்க மாயினும் வேண்டா" என்பவன் அல்லன். நல்லனவற்றை மன்பதைக் கருளி அல்லதை எல்லாம் தான் கொள்கிறான். வானோரும் மண்ணோரும் உய்ய நஞ்சுண்டும் சாவாத பேரருளாளன் நம்மிறைவன். அன்பும், அருளும் கொண்ட வாழ்க்கையுடைய வள்ளல்களைப் புலவர்கள் வாழ்த்தினர். அவர்கள் வாழ்த்துக்கு உவமை இறைவனது பேரருள் திறனாக விளங்கியது. புறநானூற்றில் ஔவையார் அதிகமானை "நீலமணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும நீயே" என்று வாழ்த்தும் வாழ்த்துரையை நாம் படிக்குந் தோறும் நம் சமயக் கோட்பாடு வளர்ந்திருந்த பெருமையை எண்ணி மகிழ்கிறோம். இத்தகைய அன்பு நெறியாகிய சிவ நெறி, பின்னர் எல்லோரும் ஓர் குலம் என்கிற ஒருமைப் பாட்டினைப் பிறசமயத் தாக்குதல்களால் மறந்தது. அதனை மீண்டும் வலியுறுத்த "ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்" என்ற ஒற்றுமைமுழக்கத்தைத் திருமூலர் எழுப்பினார். ஆனால் சாதிப்பித்தினை வளர்க்கும் பிறரது கலப்பால் நம் தமிழ் நெறி அக் கொள்கையை முற்றும் பின் பற்ற முடியாமல் தளர்ந்தது என்றே கருத வேண்டியிருக்கின்றது.

திருமுறை அருளிய அருளாளர்கள் இச்சாதிக் கொடுமையைப் பார்த்து வருந்தினர். சமயச் செந்நெறியிலும் இப்பேய்புகுந்து கொண்டது என அதைச் சாடினார். இந்தப் பிறவிக் கடலைக் கடப்பதற்குச் சமயச் செந்நெறிதான் வழியாக இருந்தது. ஆனால் அந்நெறி செல்லும் தெப்பத்தை மூழ்கடிக்கும் சுழியாக அமைந்து விட்டன சாதி குலங்கள். அவற்றைக் கடந்து ஏறுவதற்குச்சிவநெறியே துணைசெய்தது என்பதனை மாணிக்கவாசகர்,

> "சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
> ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
> பேதை குணம் பிறருருவம் யான் எனதென் னுரை
> மாய்த்துக்
> கோதில முதானானைக் குலாவு தில்லை கண்டேனே !!

என்று பேசுகிறார்

இச் சாதிமுறை புகுந்து வழிபாட்டுச் செந்நெறியாம் நம் சமயத்தைப் பாழ்படுத்தியது. இதனைக்கண்டு மனம் வருந்திய அப்பரடிகள்,

"சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்வீர்
பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே"

என்கிறார்.

'சாத்திரங்கள் பல பேசும் சழக்கர்காள்' என்பதற்கு வெறும் நூலறிவினாலே பயனற்ற நிலையை உருவாக்கும் குழப்ப வாதிகளே என்பதுதானே பொருள். அதற்கு மேல் செம்மையுள் நின்று 'சிவகதி' விளைவதற்காவன செய்யாமல் இருக்கும் தடையையும் எடுத்துக் கூறுவார் போல "கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்வீர்" என்று கூறுவதைக் காண்கிறோம்.

இவ்வாறு பிறரது கொள்கைக் கலப்பால் எழுந்த சாதிக் கோட்பாடுகளைச் சமயத்தினின்றும் அறவே விரட்டும் நெறியாகவே வீரசைவ நெறிவிளங்கியது. ஒன்றே குலம் என்ற கொள்கையில் பற்றிக் கொண்டு, தாம் வழிபடும் உயிர்க்குறுதிப் பொருளாம் இறைவனை அகத்தும் புறத்தும் கொண்டு வாழ்தல் வேண்டும் என்று வற்புறுத்தியது. அவ்வாறு வாழும் நெறியுடையோர், அனைவரும் ஒரே குலத்தினர். அவர்களை வேறாகக் கருதினால் அவர்கள் வழிபடும் இறைவனையும் வேறாகக் கருதினவர்கள் ஆவார்கள் என்பதையே,

"சங்கம னுக் கொரு சாதி யுன்னினான்
அங்கையின் அமர்தரும் அரற்கு முன்னினான்"

எனச் சிவப்பிரகாச அடிகள், சித்தாந்த சிகாமணியில் கூறியுள்ளார். வீரசைவ நெறி சாதி பற்றிய எண்ணம் பரவாமல் தடுத்து, எல்லோரையும் ஒன்று படுத்திய நெறி யென்று கூறலாம். ஆனால் இன்று தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் இதுவும் சாதிச் சுழலிலிருந்து தப்ப

வில்லை. தப்பாதது மட்டுமல்ல, அதனுள்ளும் ஒருதனிச் சாதி என்கின்ற நிலை வளர்ந்து விட்டது. இந்நிலை மாறித் தானாக வேண்டும்.

நமது சைவசித்தாந்த நெறி முப்பொருள் உண்மையை வலியுறுத்துவது. உயிர்க்குயிராய் இருந்து இறைவன் அருள் புரிவதை உணர்த்துவது. கண்ணொளியும், அருக்க னொளியும் போல உயிர்க்கு இறைவன் உணர்த்துகிறான் என்பதை விளக்குகிறது. இதனையே வீரசைவ நெறியும் வற்புறுத்துகிறது. பருப்பொருளாகிய (பூத) உடம்பு, தூயதாதற்பொருட்டு அங்கலிங்கமும், நுண்பொருளாகிய (சூக்கும) உடம்பு தூயதாதற் பொருட்டுப் பிராணலிங் கமும், (சூக்குமம்) சிற்றறிவுடைய உயிர் தூயதாதற் பொருட்டுக் காரணலிங்கமும், (அதிசூக்குமம்) கொண்டு வழிபட வேண்டும். என்பது வீரசைவ நெறி. இவ்வழி பாட்டைத் திருமுறை யாசிரியர்களும் வற்புறுத்து கின்றனர். நமது அப்பரடிகள்,

> "காயமே கோயில் ஆகக் கடிமனம் அடிமையாக
> வாய்மையே தூய்மை ஆக மனமணி இலிங்கமாக
> நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
> பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டி னோமே"

என்று கூறுவதை எண்ணும் போதும், "உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பும் ஆலயம்" என்ற திருமூலர் செஞ் சொல்லை நினைக்கும் போதும், உடம்பும் உள்ளமும் இறை வன் எழுந்தருளுதற் கேற்ற இடம் என்பதும், உணர்வு கொண்டு வழிபாடாற்றுதல் வேண்டும் என்பதும் பெறப் படுகிறது.

மூவகையாக நாம் ஒரு பொருளை நுகருகிறோம் பருப் பொருளாகிய ஒரு பழத்தை உண்கிறோம். அதன் நுண் மையாகிய சுவையை மனத்தில் கொள்ளுகிறோம். அம் பழத்தை யுண்டதினாலும். சுவையை நுகர்ந்ததினாலுப் ஆயபயன் நம்மை அமைதிப் படுத்துகின்றது. இம் மூன்று தன்மையும் வைத்து 'அங்கலிங்கம்' உடம்பிலும், 'பிராண லிங்கம்' உள்ளத்திலும், காரணலிங்கம் (பாவம்) உணர்

விலும் அமைய. அம்மூன்றையும் இறைவனுக்குப் படைக்க வேண்டுமென்று வீரசைவ நெறி வற்புறுத்துகிறது. இதனைப் பிரபுலிங்க லீலையில் சிவப்பிரகாச அடிகளார்,

" அடைந்துள்ள உருச் சுவை அமைதி யென்பன
உடம் பொரு மூன்றினு முற்ற டைந்திடுந்
தொடர்ந் துள வினைவலி தொலைத்து யானெனும்
இடும்பையி லின்பருளிட்ட லிங்கமே "

எனவும், சித்தாந்த சிகாமணியில்.

" திரம்பெறு மிலிங்க மூன்று திறத்ததாந் தூலலிங்கம்
பரம் பெறு சூக்குமம்பின் பராற்பர மென்னத் தூலங்
கரம் பெறு மிட்டலிங்கங் கருத்தது சூக்கு மந்தான்
நிரம் புறு மிலிங்கந் தானே நிகழ் பராற் பரமென்
றோர்வாய் "

என்றும் தெரிவித்துள்ளார்கள்.

பண்டைய அருளாளர்கள் கொள்கைகள் இம்முறையை ஏற்றுக் கொள்ளுகின்றன. சிவ வழிபாடும், அகத்தினில் வழிபடும் பாங்கும் மனந்தூய்மையும், செய்வினைகள் தூய்மையும் ஆகத் துணை செய்கின்றன. இவ்வாறு வழிபாடு சிறப்பதற்கு அடியார் திருக்கூட்டத்தில் இணைந்த வாழ்க்கை வேண்டும். இதனையே 'குருலிங்க சங்கமம்' என்கின்றோம். இத்தகைய நெறியையே வீரசைவம் என்று போற்றுகின்றோம்.

அழுதடியடைந்த அன்பர் ஆகிய மாணிக்கவாசகர், நமது மனமுருக்கும் வாசகந் தந்த பெருந்தகை அவர்தம்மைப் பற்றி,

" வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்ச நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாச கமிங் கொருகால் ஓதின்
கருங்கல் மனமுங் கரைத்துகக் கண்கள்

தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம் மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப் பெய்தி
அன்ப ராகுநரன்றி
மன்பதை உலகின் மற்றையரிலரே ''

என்று சிவப் பிரகாச அடிகள் கூறுவதை அறிகிறோம். அத்தகைய திருவாசகப் பாடல்கள் நம்மை ஒருவழிப் படுத்துவன. வீரசைவ உண்மையைப் புலப்படுத்துவன போல விளங்குகின்றன.

'' முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல் வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்த மலம்அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட
அத்தனெனக் கருளியவா றார் பெறுவார் அச்சோவே ''

என்று கூறுவதால், அவனே தானுகின்ற செந்நெறி ஆகிய சிவகதி விளைவினைக் காண்கிறோம்.

இன்னும் இறைவன், இறைவியுடன் நீக்கமற நிற்கிறான். இறைவி, இறைவனை விட்டு நீங்காது இருக்கிறாள். வழிபடும் அன்பரிடத்தில் இருவரும் ஒன்றாய் விளங்குகின்றனர். சத்தியின் அருளே பலவிதமாக நம்மை ஆட்கொள்ளுகிறது. நாம் வழிபடும் திருவுருவமாக இறைவன் வெளிப்படுதற்கும் சத்தியே காரணம். அன்னையொடு விளங்கும் அண்ணல் மூலபண்டாரம் வழங்கும் முதல்வனாக இருக்கிறான். அத்தகைய அண்ணலை நோக்கி மாணிக்கவாசகர்,

'' மையிலங்கு நற் கண்ணி பங்கனே
வந்தெனைப் பணி கொண்ட பின்மழக்
கையிலங்கு பொற் கிண்ண மென்றலால்
அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யிலங்கு வெண்ணீற்று மேனியாய்
மெய்ம்மை அன்பர் உன் மெய்ம்மை மேவினார்
பொய்யிலங் கெனைப் புகுத விட்டு நீ
போவதோ சொலாய் பொருத்தமாவதே ''

என்கிறார். இதே கருத்தை இன்னொரு வகையாகச் சிவப் பிரகாசரும்,

"பூவாய் நெடுங் கோட் டுறு பசுந்தேன்
கைகான் முடங்கு பொறி யிலிதன்
நாவாய் ஒழுகிற்று எனவுலகம்
அளந்த மாலும் நான் முகனுங்
காவாய் என நின் றேத் தெடுப்பத்
தானே வந்தெங் கரதலத்தின்
மேவா வமர்ந்த மாமணியைத்
தொழுது விணக்கு விடை கொடுப்பாம்"
என்கிருர். மணிவாசகர் கூறுகின்ற,

"விணயிலே கிடந்தேணைப் புகுந் து நின் று
போது நான் விணக் கேடன் என்பாய் போல
இணயன் நான் என் று ன்ண அறிவித் தென்ணை
ஆட் கொண் டெம் பிரான் ஆனுய்க்கு இரும்பின்
பாவை
அனய நான் பாடேன் நின்ருடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவிசோரேன்
முணவனே முறையோ நான் ஆனவாறு
முடிவறியேன் முதலந்தம் ஆயினுனே"
என்னும் பாடலும் இதணை வலியுறுத்துகின்றது.

மேலும் அடியவர் நடுவில் வாழும் வாழ்க்கையை வீர சைவம், தன் நெறியின் சிறந்த கொள்கையாகக் கொள்ளு கிறது என்பதைப் பார்த்தோம். அக்கருத்தை வலியுறுத் தும் பாங்கிலேயே சிவப்பிரகாசர் நால்வர் நான் மணி மாலை, நெஞ்சு விடு தூது போன்றவற்றிலும் நாயன் மார் களது புகழ்களைக் கூறுகின்ருர். அத்தகைய அடியாரு டன் வாழும் வாழ்க்கையையே,

"உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள்
நீ இருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தாஞல் அடியேன்
உன்

அடியார் நடுவுளிருக்கும் அருளைப் புரியாய் பொன்னம்
பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம்
முன்னின்றே ''

என்பதும், இந்நெறிக்கு அரண் செய்வதாக இருக்கிறது. அன்றியும் இறைவனது திருவருள் நலந்தோய்ந்த மணி வாசகர்,

'' தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்ற தொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்ட எம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான்இதற் கிலன் ஓர் கைம் மாறே. ''

என்று கூறுவதிலிருந்து அகத்தும். புறத்தும் இறைவனைத் தாங்கி வாழும் வீரசைவ நெறியின் கொள்கை சைவசித் தாந்தக் கொள்கையே என்பது வலியுறுத்தப் படுகின்றது இப்படிக்கூறுவதிலிருந்து மாணிக்கவாசகர் இக்கொள்கை யினர் என்றோ. அல்லர் என்றோ கூறுவதாகிய ஆராய்ச் சிக்கு யான் வரவில்லை. வீரசைவநெறி முப்பொருள் உண்மையை ஒத்துக் கொள்கின்ற, நால்வராதிய பெரு மக்கள் கூறுகின்ற கொள்கையைவலியுறுத்துகின்ற, சாதி குலப்பித்தகற்றும் நெறி என்பதை விளக்குவதே ஆகும்.

இந்நெறியினை மேற்கொண்டு செந்தமிழ்ச் சிவநெறி தழைக்க, கருணை (பத்தி), ஈடுபாடு, உறுதி, இன்பம் ஆகிய வற்றை உணருமாறு கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்னும் நூல்களை அருளிய, தவத்திரு சாந்தலிங்க அடிகளார் சிவ நெறியே சிறந்தது எனக் கொலை மறுத்தலில் வற்புறுத்து கிறார்.

மேலும் தமக்குத் தில்லைப் பெருமான் திருக்காட்சி கிடைத்ததை மீண்டும் பெற வேண்டுமென்று விரும்புகிறார். அதற்காக இறைவனிடம் முறையிடுகிறார் ஒரு நாள் ஆனேற்றில் அம்மையுடன் எளிதாகக் காட்சி தந்த இறைவனே! இன்று நீ வரமாட்டாயா? என்று ஏங்கி நிற்கின்றேன். இரங்க மாட்டாயா?" என்பதை

"பிரானே திருத்தில்லை யுளாயன்றிப் பேதையேன் முன்
ஒரானேறி வர்ந்தம்பிகையோ டெளிதோடி வந்தாய்
வரானே வினமெம் மிறை யென்றுனை நாடி வாடி
யிரா நாயடியேற் கெதிர் தோன்றிலை யின்றி தென்னே"

என்னும் வைராக்கிய சதகப் பாடலால் அறிகிறோம்.

இவ்வாறு இறைவனைத் திருக்கோயிற் காட்சியிற் காண விழைந்ததுடன், தம் ஆணவ வல்வினையை அகற்றுபவர் என அவரிடத்துத் தம் முறையீட்டைத் தெரிவிக்கிறார். இவ்வாணவம், ஐவர்க் கெதிரே என்னை இழிவு படுத்துகிறது. வினைத் தொகையைப் பெருகச் செய்து, பிறவியில் சேர்ப்பேன் என்கிறது. உனக்காகச் சிவனே, முன் வரினும் அவ்வாண்மையைப் பார்க்கிறேன், எனச் சொல்லுகிறது. அதனை மாற்றுக என்பதை,

"செய்விப்பன் வினைத்தொகை வெம்பவஞ்சேர்ப்பனுன்னை
யுய்விப்பனே லச்சிவனுண்மையு மோர்வனென்றோர்
ஐவர்க் கெதிரேயெனை நோக்கி மறைந்ததையா
மைவெற் பனஆணவம்நியதை மாற்றிடாயோ."

இத்தகைய எந்தை எனக்குக் குருவாக விளங்குவதுடன், என் அங்கைத் தலத்தும் விளங்குகிறார். அவரை யான் என்னென்று சொல்லுவேன். என அருளுவதை நாம் உணருந்தோறும், நமது முன்னோர்கள் கொண்ட சிவநெறியாகிய அருள்நெறி ஒருமைப் பாடுடையது; வேறுபடாதது; உள்ளும், புறம்பும் இறைவனை யெண்ணும் தகையது. அப்பொருள் உருவாயும் அருவாயும் அருவுருவாயும் விளங்கும்இதனை யுணருவதே நமது குறிக் கோள் என்பது தெளிவாகிறது.

இவற்றைச் சாந்தலிங்க அடிகளார்,

" விளம்பற்கருஞ் சோதி யென்கோ விடையோ
னென்கோ வென்
உளம் புக்க சிவப்பிரகாச னென்கோ வென்னங் கைத்
தளம் பற்றிய சாந்த னென்கோ நின்றனது நாமம்
வளம் பெற்ற திருக்கயிலாய சொல்வா யெனக்கே "

என அருளியுள்ளார்.

அன்புப் பெருமக்களே ! இதுகாறும் கூறியவற்ருல், வீரசைவநெறி பண்டையது, சித்தாந்த நெறி, இந்திய நாடு முழுவதும் பரவியது என்பதை உணருகிறேம். தமிழகத்தைப் பொறுத்தவரையில் திருமுறை நெறியே, வீர சைவ நெறி; சிவநெறியின் உறுதிப் பாடே வீரசைவநெறி. சாதி, குலம் சமயத்தில் புகுதாமல் இருக்க வேண்டுமென் பதே இதன் கொள்கை. இவ்வாறு நாம் வழிபடுவதனுல் எய்தும் பயன், யான், எனது என்பதை யறுப்பதே என் பதை யுணருகிறேம். யார், எவ்வடிவத்தில் எவ்வாறு, வழிபட்டாலும் அங்கெல்லாம் இறைவன் வெளிப்படு கிருன். வழிபாட்டின் பயன் வீடுபெறுதல். வீடடை தற்குத் தடையாக இருப்பது, தற்போத மாகிய யான் எனதென்னும் செருக்காகும். அதனை அறுப்பதே உயர் வான நெறி என்பதை,

" எம்மதத் தோரெவ் வகை நிட்டை சொல்லினுஞ்
சம்மத மே யெமக் குந்தீ பற
தற்போதம் மாய்க்குமேல் உந்தீ பற "

என்கிருர் சாந்தலிங்க அடிகளார். இதனைநன் குணர்ந்து வாழ்வோமாக !

வளர்க அருள் நெறி - வாழ்க தமிழ்ப் பண்பு

# திருக்குறளும் சமயமும்

பேராசிரியர் சரவண ஆறுமுக முதலியார்,
எம்.ஏ., பி.ஓ.எல்., எல்.டி.,
முதல்வர், பழனியாண்டவர் கீழ்த்திசைப் பண்பாட்டுக் கல்லூரி, பழனி.

(முன் தொடர்ச்சி)

ஆனால் விடென்பது "சிந்தையும் மொழியும் செல்லாநிலை" மைத்தாகலின் நூல்களால் நேராகக் கூறப்படுவன அறம் பொருளின்பங்களே. விடோ எனின் நேராக இலக்கணவகையானன்றி மறைமுகமாகத் துறவறமாகிய காரண வகையால் மட்டுமே கூறப்பெறும். திருவள்ளுவரும் வீட்டு நெறியைத் துறவறத்தில் அமைப்பர். இன்பப்பால், அறத்துப்பாலில் இல்லறவியல், பொருட்பால்களை முறைப் படுத்திப் பயின்றோர், பின் துறவியலில் நிலையாமை, துறவு கடவுள் வாழ்த்து நீத்தார் பெருமை, மெய்யுணர் தல், அவாவறுத்தல்களை முறையாகத் தொடர்ந்து படித் தால், வேண்டாமை என்னும் விழுச்செல்வம் பெற்று வீட்டின்பத்தை விழுமிதினெய்துவர். இவ்வீட்டுநெறிச் சமய வாழ்க்கை, எவ்வாறு திருக்குறளில் வகுக்கப் பெறு கிற தென்பதைச் சுருக்கமாக ஆராய்ந்து பார்ப்போம்.

சமய வாழ்க்கை யென்பது ஏதோ ஒரு நாளில் ஒரு ஐந்து மணித்துளிகள் அல்லது கால்மணி அல்லது ஒரு மணி நேரம் மட்டும் திகழ்கின்றது என்று மட்டுமில்லாமல் ஒவ்வொருவருடைய வாழ்நாள் முழுவதும் ஒரு நாடு முழு வதும் எந்நிலையிலும் இழையும் குழையும் போல் இணைபிரி யாது, இல்வாழ்க்கை, சமுதாய வாழ்க்கைகளில் ஊடுருவிச் செல்லும் நீர்மைத்தாய்ச் செயல்படு நிலையில் உள்ளதாக இருந்தால்தான், உயிருள்ளதாக மிளிரும். சமுதாயத் திலும் அதன் கைவண்ணத்தைக் காணவேண்டும் அங் ஙனமின்றி அது ஏட்டளவில், மரபுச் சமயச் சடங்குகள் அளவில், பேச்சளவில் "திண்ணைச் சித்தாந்தமாக" உள்ள அளவில் உயிருள்ள உண்மைச் சமயமாகாது. அதனால் எவருக்கும் எப்பயனும் விளையாது.

இல்வாழ்க்கையில் அடிப்படையாக அமைந்துள்ள அன்புநெறியாகிய பிஞ்சு, படிப்படியாக வளர்ந்துகொண்டு போய்ச் சமய நெறியின் அடிப்படையாகிய அருள்நெறி

யாகக் காய்த்து முற்றி முதிர்ந்து முத்திக் கனியாகப் பழுக்கும். இல்லறத்தை வழுவாதியற்றி மெய்யுணர்வெய்தும் நோக்கத்தோடு உலகப் பற்றுக்களை விட்டுத் துறவொழுக்கத்தைக் கைக் கொண்டு மெய்யுணர்வெய்தும் நிலையையே திருக்குறள் சமய வாழ்க்கையின் முடிந்த குறிக்கோளாய்க் கொண்டுள்ளதால் மன்பதையுலகில், அனைவரும் ஏற்றுக் கொள்ளும் முறையில், ஒரு பரந்த நோக்கமும் விரிந்த பார்வையும் கொண்டு, அம்முறையை வகுத்துள்ளது. "அறன் வலியுறுத்தலில்" பொதுவாக அறத்தினது சிறப்பைக் கூறவந்த ஆசிரியர் அதன் முடிந்த நிலையையும் அதையடையும் வழியையும் இவ்வதிகாரத்தில் தொகுத்துக் கூறி, ஏனைய பால் இயல் அதிகாரங்களில் வகுத்து விவரித்துக் கூறுகின்றார்.

சுருங்கக் கூறுமிடத்து, அழுக்காறு, அவா, வெகுளி இன்னாச்சொல் நான்கிலும் இழுக்காது இயன்றதே அறமாம். இதையே மெய்யுணர்வு அதிகார ஈற்றில் "காமம் வெகுளி மயக்கமிவை மூன்றன், நாமம் கெடக் கெடும் நோய்" என்றும், 'அவா வறுத்தல்' அதிகார ஈற்றில், "ஆராவியற்கை அவா நீப்பின் அந்நிலையே, பேராவியற்கைதரும்" என்றும் முடிந்த முடிபாக வற்புறுத்தியுள்ளார். "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன் ஆகுல நீர பிற" என்ற அறமுடிபே சமய முடிபுமாகும். மனத்துக் கண் மாசறும் முதிர்ந்தநிலை இல்வாழ்க்கை வழியாக அடையப்படுவது இயல்பாகுமென்பதை அறிவிக்கவே முதற்கண் இல்வாழ்க்கை நெறியை வைத்து அதில் வளர்க்கும் அன்பு நெறியைக் கூறி அதன் பயனாகிய துற வொழுக்க நெறியை அடுத்து வைத்துள்ளார் ஆசிரியர். இல்லறமாகிய பெரும் பள்ளியில் அன்பைப் பயின்று, எவ்வாறு தனக்கெனவே வாழாது பிறர்க்குரியாளருமாவது என்று தேர்ந்த பிறகே, மெய்யுணர்வுப் பட்டம் பெரும் பாலோர்க்குக் கிடைக்கக் கூடிய இயற்கை நெறி. மாணாக்கராயிருந்து கல்வி கற்றுக், கல்விப் பயனைப் பெற இல்வாழ்க்கையேற்று, அவ்வாழ்க்கையில் அன்பும் அருளும் விளங்கப் பெற்று எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணாளராகி மேன்மையுறல், ஒவ்வொரு வாழ்க்கையிலும் அரும்பு, மலர், காய், கனிபோல் அடுத்

தடுத்துப் படிப்படியாய் வருகின்றன. ஒரோ வழி முற்றத் துறந்த முனிவர்கள் சிலர் முற்பிறவிகளிற் பெற்ற நற் பயிற்சிகளின் பயனுய் இல்வாழ்க்கை வழியினன்றி நேரே யும் துறவற மெய்யுணர்வுகளை அடைவதுமுண்டு.

எவ்வழியில் இந்நிலை யெய்தினும், இந்நிலையில் அருளு டைமை சிறப்பாக மிளிரும். இல்வாழ்க்கையில் விளங் கிய அன்பு விரிந்து கொண்டே சென்று உயர்ந்த நிலையை அடைந்த பொழுது, தொடர்பு பற்ருது, இனம், குலம், நாடு, இடம், காலம் முதலியவற்றைக் கடந்து எல்லாவுயிர் களிடத்தும் இயல்பாகவே செல்கின்றது. இல்வாழ்க்கையில் மிளிரும் சமய வாழ்க்கையில் மனைவி, மக்கள், ஒக்கல், என்ற தொடர்பு பற்றி நிகழ்ந்த இவ்வன்பு துறவறமாகிய சமய வாழ்க்கையில் அக்காரணங்கள் எல்லாம் கடந்து சென்று, இயல்பாகவே எல்லா மக்களிடத்தும், எல்லா உயிர்களி டத்தும் முன்னர் காட்டிய இராமலிங்கஅடிகளார் முறை யில் செல்லா நிற்கும். இந்நிலையில் இது 'அருள்' என்னும் பெயரைப் பெறுகின்றது. இறைவன் எல்லா உயிர்களை யும் பொது நோக்கக் கண் கொண்டே நோக்கி வேற்றுமை பாராட்டாது ஒருபடியாகவே அவ்வவற்றிற்குத் தக்க வாறு அருள் புரிகின்ருன். இதுவே அருள் உளங்கனிந்த தூயவுள்ள முடையதுறவிகளின்மன மிளகுந்தன்மையாம் அருள் எனப்பெறும். அன்பே இதற்கு அடிப்படை யாதலின் ஆசிரியர் "அருள் எனும் அன்பீன் குழவி" என்று தாய் சேய் உவமை வாயிலாக அன்பையும் அருளை யும் விளக்குகின்ருர். அருளுடைமை அனைத்துயிர் மாட் டும் செல்லுந் தன்மைத் தாகலின் அருளுடையோர் "யாதுமூரே யாவரும் கேளிர்," "ஒன்றே குலமும் ஒரு வனே தேவனும்", "அன்பேசிவம்" என்ற உயர்ந்த பொது நோக்கில் நிற்பவராவர்.

இனி இவ்வருளாளரின் ஒழுகலாற்றை மனத்துக் கண் மாசிலராகி உள்ளத் துறவியாகத் திருவள்ளுவர் தாம் உலகத்தில் வாழ்ந்து காட்டிய உண்மை நெறியையே யாம்பெற்ற பேறு பெறுக இவ்வையகம் எனத் தமது துறவறவியலில் விளக்கினர். போலி உருத்தாங்கி உலகை ஏமாற்றும் துறவிப்போலிகளும்அக்காலத்தே உண்டு போ லும்? ஆதலினன்றேதிருவள்ளுவர் கூடா ஒழுக்கத்தில் அன்

ஞர் தம் போலிப் புன்னெறியைச் சாலவும் வெறுத்துரைக் கின்றனர். அன்னூர் தம் கூடா ஒழுக்கத்தைத் தடுத்து நிறுத்தித் தூய துறவறச் சமய நெறியையே எடுத்து மொழிகின்றார். உண்மைத் துறவிகள் உலகிடையே யிருப்பினும், "பரஞானத் தாற் பரத்தைத் தரிசித்தார், பரமே பார்த்திருப்பர், பதார்த்தங்கள் பாரார்" என்ற சிவஞான சித்தியார் கூறுமாறு மெய்ப்பொருள் நாட்ட மே உடையராயிருப்பர். இத்தகையோர் இல்லறத்தை நல்லறமாக நடத்தினுல் தான் என்ன? பற்றற்ற துறவற நெறியில் நின்றால்தான் என்ன ? பயன் ஒன்றே.

தூய துறவற நெறிக்கு, சமய வாழ்விற்கு, அருளு டைமை அடிப்படையானதால் அருளுடைமை பற்றுக் கோடாகப் பிறக்கும் பல அருட்செயல்களையே அன்னூர் மேற்கொள்வர். பொருள் அற்றார் ஒரோ வழி ஊழ்வழி யால் அதையும் பெறலாம். அருளற்றார் ஒன்றையும் பெறமுடியாது. இவ்வருளாளர் செயல்களாக வள்ளுவர் புலால் மறுத்தல், இன்னு செய்யாமை, கொல்லாமை முதலியவற்றை வைத்தார். இல்லறத்தோருக்கு வற் புறுத்திக் கூறிய வெஃகாமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம், முதலியவற்றையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். திருவள்ளுவர் போல் அருள் பழுத்த தூய துறவிகளாகிய தாயுமானவ அடிகளாரும் இராமலிங்க அடிகளாரும் கொல்லாமையும் மன்னுயிர்க்கன்பும் குவலய மெல்லாம் விளங்கப் பாடுபட்டதைத் தமிழ் நாட்டிற் கேளாதாரும் படித்தறியா தோருமுண்டோ ?

இந்நெறி நிற்போர் மேல், தள்ள த்தக்கனவெனக் கூறியவற்றோடு, மன மொழிக் குற்றங்களாகிய கள்ளா மை, பொய்யாமை, வெகுளாமைகளையும் வேரறக் களைய வேண்டும். இவ்வருள் ஒழுக்க நெறி நின்றார் மனம் பொறிவழிப் போகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உண்டிசுருங்கல் முதலிய செயல்களை ஏற்று அவற்றால் வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு, பிறவுயிர் ளுக்குத்துன்பஞ் செய்யாதுஅவம் ஒழிக்கும் தவநெறியில் நிற்றல் இயல்பென்பர். தாம் மேற்கொண்ட நெறியில்தவம் ஒரு இன்றியமையாத உறுப்பாகும். உற்றநோய்நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு"

தவமுறையால் மெய்யுணர்வு பெருகிக் கொண்டே வரும். தொல்காப்பியனாரும்தவசிகளுக்கிலக்கணம் கூறியுள்ளதை யும், பரிமேலழகரைப் போலவே நச்சினார்க்கினியரும்தவஞ் செய்வோரென்றும் தவஞ்செய்து யோக நெறியில் நிற் போர் என்றும்,தவசிகளை இரு கூறாகப் பிரித்துப் பொருள் கூறுவதையும், வாகைத் திணையில் பரக்கக் காணலாகும். போலித்துறவிகளின் கூடா வொழுக்கத்தை அடாததென வள்ளுவர்,

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்" என்று அறுதியிட்டுரைக் கின்றார்.

இத்தவவொழுக்கத்தின் பயனாக-மெய்யுணர்வு முறை யாக வந்தெய்தும். மெய்யுணர்வு வந்தெய்தும் முறை யாது? அதற்கு முதற்படி இவ்வுலகில் தோன்றிய பொருள் கள் நிலையற்றவை என்ற உணர்ச்சியாகும். செல்வம், உடல், இளமை, அழகு முதலியவை நிலையற்றன என்ற உணர்ச்சி வரவேண்டும். உடம்புக்கு உயிரோடுள்ள தொடர்பு, கருவும் தானும் ஒன்றாய்ப் பிறந்து வேறு வேறாய்ப் பிரியும் வரை தனக்காதாரமாக விருந்த முட்டை யைப் பருவம் வந்தவுடன் பறவை விட்டுப் பிரியும். பற வைக்கும் அது பிரிந்த முட்டைக்கும் உள்ள தொடர்பை யே ஒக்கும். இறப்பதும் பிறப்பதும் உறங்குவதும் விழிப்பதும் போலப் புதுவதன்றி இவ்வுலக வாழ்வும் பொருள்களும் நிலையற்றன என வுணர்ந்த பெரியார் புறமாகிய செல்வமாதிய பொருள்களின் மேலும், அக மாகிய யாக்கையின் கண்ணுமுள்ள பற்றுக்களை அகப் பற்றுப்புறப் பற்றுக்களைச் சிறிது சிறிதாக விட்டுத் துறப்பர். "தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி வலைப் பட்டார் மற்றையவர்" பற்றற்ற கண்ணே பிறப்பறுங் கும்; மற்று நிலையாமை காணப் பெறும். உலகப் பற்றை விடுவதற்கு இறைவன் பற்றினைப் பற்ற வேண்டும்.இனிக் கடவுள் வாழ்த்திலேயே இறைவனது திருவடியையே உற்ற துணையாக வள்ளுவர் அமைத்து வைத்திருப்பதை இதோடு இணைத்துப் பார்க்கவேண்டும். பிறவிப் பெருங்கடலை இறைவன் திருவடிப் புணையாலேயே கடக்கவேண்டும். பற்று நீக்குவான் பரம்பொருளைப் பற்றுவோரே பிறப்பு

விடுகளையும், பிறப்பின் காரணத்தையும் வீட்டை அடையும் வழியையும், ஐயம், திரிபு விபரிதங்களின்றி உண்மையாக உணர்வார்கள். இவ்வுணர்வே மெய்யுணர்வு எனப் படும். உலகில் உள்ள பல அறிவியற் கலைகளும் பலவகையான உலகப் பொருள்களை ஆராய இவ்வுணர்வுகளுக் கெல்லாம் அப்பாற்பட்ட.

"எல்லா வுலகுமாய்த் தழைத்துப் பிழைத்தவை அல்லவாய் நிற்கும்" இறைவனது உண்மைத் தத்துவத்தை உணரும் உணர்வே மெய்யுணர்வாகும். இவ்வுணர்வைத் திருஞானசம்பந்தர் உற்ற நிலையைச் சேக்கிழார்,

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்"

என்று ஒப்பற்ற இத் தெய்வத் திருப்பனுவலில் விளக்கியுள்ளார். இம் மெய்யுணர்வைக் கற்றறிந்தடங்கிய நற்றேசிகர் பால் கேட்டு அறிவதோடு நின்றுவிடாமல் அளவைகளானும் பொருந்து மாற்றானும் தெளிய ஆராய்ந்துணர்ந்து பின் வாழ்க்கையில் செயலிலும் கொண்டு செலுத்த வேண்டும். இவ்வாறு முன்னும் பின்னும் உள்ள வினைத்தொடர்பறுத்த துறவி ஒருவருக்கு அப்போது நின்ற உடம்பும் அதற்கேற்றவினைப் பயன் களுமுள்ளனவாகையால் அவர் மனத் துறவொழுக்கநெறி நின்றாராயினும் பழைய வழக்கத்தின் காரணத்தால் அவர் வென்றடக்கிய புலன்களின மீதுநினைவு மீட்டும் செல்லும். அந்நினைவு அவிச்சையை உண்டு பண்ணிப் பிறவிக்குக் காரணமாக நிற்கும். இதையே திருவள்ளுவர் அவா என்பார். இவ்வவாவையும் இடைவிடாதமெய்ப் பொருள் உணர்வால் ஒழித்தல் வேண்டும். இதுவே அவாவறுத்தலாம்.

"ஆரா வியற்கை யவாநீப்பி னந் நிலையே
பேரா வியற்கை தரும்"

இப்பெற்றியராகிய தூய துறவிகளை வள்ளுவர் நீத்தார் என்பர்.

இவர் தம் பெருமை பேசவும் படுமோ? முற்றத் துறந்த முனிவர் தம்பெருமை, நன்று என்பவற்றுள் எல்லாம் நன்று. விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் விழு

பிது என்று நூல்கள் பேசாநிற்கும். செயற்கரிய செய்தவராகிய இவரே பெரியர். இவரே நிறைமொழி மாந்தர். இவர்கள் அருளுக்கு எல்லோரும் உரியராதல் வேண்டும். இவரைப் போல் ஒவ்வொருவரும் அருளாளர் ஆதல்வேண்டும். இதுவே தான் சமய நெறி செல்வோர் பெறும் பயனுகும்.

எனவே, அன்பு நெறியாகும் இல்லறநெறி நிற்போரும், அருள்நெறியாம் துறவறநெறி நிற்போரும் முடிவில் சமய வாழ்க்கையில் ஈடுபட்டு, உள்ளத் துறவடைந்து மெய்யுணர் வெய்த வேண்டுமென்பதே வள்ளுவர் வகுத்த சமய நெறியாகும் இந்நெறி பொது நோக்கப் பார்வையே பெற்றிருக்கிறது. ஒழுக்கமுடைமையும் அருள் நெறியும் எல்லாச் சமய வாதிகளும் மேற்கொள்ளுவனவே. உலக நிலையாமை யுணர்ந்து, அகப்பற்று புறப் பற்றுக்களை அறவே ஒழித்துக் காம, வெகுளி, மயக்கங்களினீங்கி மெய்யுணர்வு பெறுதல் எல்லா நாட்டு மக்களும் சமயத்தினரும் அடைய முயலுகின்றதொன்றன்றோ? மேலும் பல் சமயப் பொதுமை கொண்ட கடவுள் வாழ்த்தை வள்ளுவர் அமைத்திருப்பதும், நூல் முழுவதும் கடவுளுக்கும், வீட்டிற்கும் வழங்கும் சொற்களும் எச்சமயத்தினரும், எந்நாட்டினரும் எக்காலத்தினரும், எம்மொழியினரும் ஏற்றுக்கொள்ளக் கூடியவையாய் உள்ளன. இது பற்றியே தான் தமிழ் மறையாகிய திருக்குறள் உலகப் பொதுமறையாகவும் திகழ்கின்றது திருக்குறளில் அன்றும் இன்றும் இனி என்றும் நின்று நிலவும் அச்சொற்களுட் சில பின் வருவன :—

கடவுளுக்கு வருவன :— சிறப்பு, செம்பொருள், மெய்ப்பொருள், உள்ளது, மெய்ம்மை, வகுத்தான், பற்றற்றான், சார்பு, தெய்வம், வாலறிவன், ஆதிபகவன், அறவாழி அந்தணன், தனக்குவமையில் லாதான், இறைவன், வேண்டுதல் வேண்டாமையில்லான் முதலியன.

வீட்டிற்கு வருவன :— சிறப்பு, தூய்மை, பேராவியற்கை, வானோர்க் குயர்ந்தவுலகம், வானம், ஈண்டு வாரா நெறி, பிறவாமை, இன்பம், முதலியன.

இறுதியாக உலக முழுவதும் ஒரே கண் கொண்டு பார்த்து எல்லோருக்கும் ஒத்த நீதியையே கூறிக் குலம்,

சமயம், காலம், இடம், மொழி பிறவேற்றுமைகளைக் கடந்து நிற்கும் இத்தமிழ் மறைப் பொதுத் தன்மை பற்றிப் பிறபுலவர் கூறுவதென்ன என்ற சில புறச்சான்று களைக் காட்டுவாம். M. Ariel என்பார் Journal Asiatique (1848) என்னும் ஆராய்ச்சி இதழில் இந்நூலின் பொது நோக்கப் போக்கைப் பற்றி எழுதிப் போந்த புகழுரை அறிஞர்கள் போற்றிப் படித்தற்குரியதாகும் :—

"The Kural is the masterpiece of Tamil Liter ature, one of the highest and purest expressions of hum an thought. That which above all is wonderful in Kural, is the fact that its author addresses himself without reg ard to castes peoples or beliefs to the whole communi ty of mankind the fact that he formulates sovereign mor ality and absolute reason that he proclaims in their very essence, in their eternal abstractedness virtue and truth, that he presents as it were in one group the highest laws of domestic and social life" என்பதே அதுவாகும். எனவே இந்நூல் எக்குலத்தினருக்கும், எந்நாட்டினவருக்கும், எச் சமயத்தவருக்கும், எக்காலத்தினருக்கும் பொதுவாகிய சமய உண்மைகளைத் தன்னகத்தே கொண்டு தனி நூலாக, விளங்குகின்றது. தாம் எழுந்த காலத்து மக்களின் கருத் தைக் கவரும் பொருள் பற்றி மட்டும் கூறிச்செல்லும் சில "தற்கால" நூற்களைப் போலன்றி முக்காலத்துக்கும் ஏற்ற உறுதிப் பொருள்களைக் கூறும் நூல்கள் என்றும் நின்று நிலவும். பிறவிப் பேறுகளாகிய அறம் பொருளின் பங்களையும் அவற்றின் வழி வீட்டின் திறத்தையும் தெரி ந்து திருவள்ளுவர் செய்த நூலும் "எக்காலத்திலும் மாறுப் பயன் தரும் மாண்புடை நூலாக விளங்குகிறது. இதைச் சொல்லின் செல்வா பேராசிரியர் டாக்டர் சேதுப் பிள்ளை "காலங்கடந்த நூல்" என்றே கருதுவர்.

காலத்தைக் கடந்ததைப் போலவே குலத்தையும் கடந்த நலத்தகு நூலாகவும் இது விளங்குகின்றது. நான்கு "வருணம்" என்ற குலப் பிரிவுகளைத் தம் முரையிற் பல விடங்களிற் பரிமேல் அழகர் திருக்குறளுக்கு வலிந்தும். நலிந்தும் பொருள் கூறியிருப்பினும், நான்கு வருணப் பிரி வுகளைப் பற்றியும், அவை ஏற்றுக் கொள்ளத் தக்கவை

யென்று போற்றியுரைத்தும் தம் நூலில் ஆசிரியர் யாண்டும் கூறினாரில்லை. ''சமன்செய்து சீர்தூக்கும் கோல்'' போலவே அறங்களையும் ஒழுக்க முறைகளையும் வகுத்து அனைவரையும் பொது நோக்கக் கண் கொண்டே பார்க்கின்றார். இந் நூலுக்கு எல்லோரும் உரியர்.

''செய்யா மொழிக்குந் திருவள் ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே — செய்யா
வதற்குரியா ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரியா ரல்லாதா ரில்'' (வெள்ளி வீதியார்)

'' ஆற்ற லழியுமென் றந்தணர்க ளுன்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத் தெழுதா — ரேட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல் சோர்வின்று'' (கோதமனார்)

என்னும் திருவள்ளுவமாலைப் பாக்களும்,

''வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்
தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி யொருகுலத்துக் கொருநீதி''

என்ற திருவனந்தைப் பேராசிரியா சுந்தரம்பிள்ளை வாக்கும் இந்நூலின் குலப் பொதுத் தன்மையைப் புலப் படுத்துகின்றன. அரிதுணர் கேள்விப் பரிமேலழகரும் ''எல்லா நூல்களினும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கியல்பு'' என்பர்.

இனி இதன் சமயப் பொதுத்தன்மைக்கு நேரடியான ஓரிரு புறச்சான்றுகள் தருதும். அக்காலத்துத் தமிழ் நாட்டுப் பல சமயங்களும் திருவள்ளுவரைத் தம் சமயத் தவர் என்று உரிமை கொண்டாடின. ஆனால் திருக்குறள் எல்லாச் சமயங்களுக்கும் இடம் கொடுத்தது.

'சமயக் கணக்கர் தம் மதிவழி கூறா
துலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன்''..............என்றுகல்லாட முடையாரும்,

''ஒன்றே பொரு ளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப வாறு சமயத்தார் — நன்றென
எப்பா வலரு மியைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி'' என்று கல்லாடரும்,

'' நால்வர் சொல் சைவர் வேதம் நளிர்குரு கூரன்
சொல்லை

போல்வலார் சிலர்தாம் சொல்லும் பொருவில் பா கவதர் வேதம்
வால்வளை யுலவும் வீதி மயிலை வள் ளுவன் சொல்யார்க்கும்
கீழ்மையை யகற்றி மேன்மை யருளுநல் வேதமாமே ''
என்று புலவர் புராண முடையாரும் இதன் சமயப் பொதுத் தன்மையைப் பலருமறியப் பாங்குடன் சாற்று கின்றனர். கிறிஸ்துவரும் இதன் பெருமையை அறிய முற்பட்ட காலத்தில் திருக்குறளை ஓங்கெழில் பொருந்திய ஆங்கில நடையில் பெயர்த்தருளிய டாக்டர் போப் பாதிரி யார், இதனை இயேசு பெருமான் மலை மேற் பொழிந்த அறவுரையின் எதிர் ஒலியாகக் (Echo) கருதினர் எது முதல் ஒலி எது எதிர் ஒலி என்று அறுதியிட்டு ரைக்கு மாராய்ச்சியில் இப்பொழுதிறங்காது திருக்குறளின்பொது மைக்கு இதுவுமொரு எடுத்துக் காட்டாகும் என்ற அளவில் அமைவோமாக.

''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான் புகழ் கொண்ட தமிழ்நாடு'' என்று பாரதியாரும்,
''பொதுமறையான திருக்குறளில்
இல்லாத தில்லை இணையில்லை முப்பாலுக் கிந்நிலத்தே''
என்று அவர்வழி வந்த புரட்சிக் கவிஞரும், திருக்குறளின் ஈடு மெடுப்பு மற்ற பொதுநோக்கப் பெருமையை எடுத்து அறை கூவிக் காட்டியுள்ளன ரன்றோ. திருக்குறளைத் தமிழ் மாதின் உயிர் நிலையாகவும் திருவள்ளுவரைத் தமிழுக்கு உயிரை ஊட்டவந்தவர் எனவும் கவிமணி நவின்றுள்ளார். இதுபோன்று சென்னை அரசவைப் புலவராய் விளங்கிய நாமக்கல் கவிஞரும் இதன் பொதுநோக்கப் போக்கைப் புகழாநிற்பர்.

இன்றிவ்வுலகில் இணக்கம் நீங்கிப் பிணக்கமும், அறம் நீங்கி மறமும், நேர்மையுணர்ச்சி நீங்கிப் போர்மையும், நேசம் நீங்கிப் பூசலும் எம்மருங்குஞ் சுற்றிச், சூழ்ந்து பற் றிப் பதிந்து கிடக்கும் நிலையில் பொதுவாகத் திருக்குறளின் இல்லற, சமுதாய வாழ்வியல்களி னறிவும், சிறப்பாகப் பொது நோக்கச் சமய வாழ்வியலறிவும், மக்கள் வாழ்வு செம்மையுற இன்றியமையாது ஒவ்வொருவருக்கும் வேண் டப் படுவதொன்றாகும். வள்ளுவர் வாழ்வியல் நிலவுக உல கெலாம். ''சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக.''

## திருநாவலூரில் சமாஜக் கூட்டம்

சுபகிருது ஆடி 24-ஆம் நாள் (8—8—1962) புதன் கிழமை சுந்தரமூர்த்தி சுவாமிகள் திரு நட்சத்திரத்தை அவர் அவதரித்த திருநாவலூரில் கொண்டாட வேண்டுமென்று முடிவு செய்யப் பெற்றிருக்கிறது. விழாவை நடத்தி வைப்பதற்கும், அன்பர்கட்கு உணவு முதலிய வசதிகள் செய்வதற்கும் அவ்வூர் நிலக்கிழார் திரு. மாணிக்கம் பிள்ளையவர்கள் மனமுவந்து அன்புடன் முன் வந்திருக்கிறார்கள். வர விரும்பும் அன்பர்கள் சமாஜச் செயலாளருக்கு 25—7—62க்குள் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது. திருநாவலூருக்குப் பண்ணுருட்டியிலிருந்தும், விழுப்புரத்திலிருந்தும் பஸ்கள் செல்கின்றன.

## சமாஜச் செயற்குழுக் கூட்டம்

சமாஜச் செயற்குழுக் கூட்டம் 29—7—62 ஞாயிறு காலை 9-30 மணிக்கு சமாஜ அலுவலகத்தில் கூடும். செயற்குழு உறுப்பினர் இதையே அழைப்பாக ஏற்றுக் கொண்டு வருமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

## முக்கிய அறிக்கை

'சித்தாந்தம்' கட்டுரை சம்பந்தமான கடிதங்களைப் பத்திராசிரியர் புலவர் N. R. முருகவேள் M. A. M. O. L., 73 கொத்தவால்சாவடித்தெரு, சைதாப்பேட்டை, சென்னை—15 என்ற முகவரிக்கும், மற்ற கடிதங்களைச் சமாஜச் செயலாளர், 12, கிழக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை—4 என்ற முகவரிக்கும் எழுதும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது.

## திருமணங்கள்

---

சமாஜத்தின் செயலாளராகப் பணியாற்றியவரும் இப்போது மலாயாவிலுள்ள வருமாகிய திரு. கா. இராமநாதன் செட்டியார் B. A. B. L., அவர்கள் புதல்வர் திருவளர் செல்வர் முத்தையாவுக்கும், திருநிறைசெல்வி தெய்வயானை என்ற சீதாவுக்கும் 21—6—62ல் நேமத்தான் பட்டியில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் மணமக்கள் நீடூழிவாழ்வார்களாக.

சமாஜத்தின் நீண்ட காலத் தொண்டரும், சென்னை முத்தியாலுப் பேட்டை உயர் நிலைப்பள்ளி உதவித் தலைமையாசிரியருமான திரு. N. T. கிருஷ்ணசாமி M. A. B. T., அவர்களின் புதல்வி திருவளர் செல்வி துளசிக்கும், திருமிகு செல்வர் சண்முகத்துக்கும் 21—6—62 ல் திருமணம் நடைபெற்றது. திரு. கிருஷ்ண சாமியின் புதல்வர் திருவளர் செல்வர் சற்குணத்துக்கும், திருநிறைச் செல்வி மல்லிகேசுவரிக்கும் 22—6—62ல் திருமணம் நிகழ்ந்தது. இவ்விரு திருமணங்களும் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜனசபையில் நிகழ்ந்தன. மணமக்களுக்குச் சமாஜம் வாழ்த்துப் பாக்கள் வாசித்தளித்தது. அன்பர்கள் உள்ளத்து அகலாதிருந்து இன்பமெலாம் அளிக்கும் சிவபிரான் அருளால் மணமக்கள் நீடூழி வாழ்வார்களாக.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.